வருவோம்' என்று இரண்டு வகையாகப் பிரிந்து சென்று அந்தச் சண்பைக் கதிரைப் பிடுங்கி யெறிந்துகொண்டு, அதனாலே பட்டு விழுந்தார்கள். இதைக் கிருஷ்ணன் கேட்டு, 'இதனாலே நமக்கு மரணமாயிருக்கும்' என்று விசாரித்து, ஆலின்மேலே ஒரு இலையிலே யோகாசனமாக ஒரு பாதத்தை மடித்து ஒரு பாதத்தைத் தூக்கி யமர்ந்திருக்கிற விடத்திலே, அந்த மீன் வேடன் பக்ஷிசாலங்களைத் தேடிவருகிறபோது, தூக்கிய பாதத்தை யொரு செம்பருந் திருக்கிறதாகப் பாவித்து அந்த அம்பைத் தொடுத்தெய்ய, கிருஷ்ணனும் பட்டுப் பரமபதத்தை அடைந்தான். இந்தச் சாபதோஷம் தூர்வாச மகாரிஷியைச் சென்று நலிகையாலே, இந்தத் தோஷத்தை நீக்கப் பரமேசுரனை நோக்கி அர்ச்சிக்க, பரமேசுவரனும் திருவுளத்தடைத் தருள, இருடியுந் தெண்டன் பண்ணி, 'தம்பிரானே! அடியேனுடைய சாபத்தாலே கிருஷ்ணனுடைய வமிசத்திலுள்ள கோபாலரெல்லாஞ் சண்பைக் கதிர்களால் சங்காரப்படுகையாலே அந்தத் தோஷ மடியேனை வந்து நலியாதபடி திருவுளத்தடைத்தருளி ரக்ஷிக்கவேண்டும்' என்று விண்ணப்பஞ் செய்ய, தூர்வாசமகாரிஷிக்குச் சண்பைச் சாபத்தினுலுள்ள தோஷத்தை நீக்கிச் சண்பை முனி யென்கிறதே திருப்பதியாக எழுந்தருளி இருந்தனே.

ஐயுறும் அமணரும் அறுவகைத் தேரும் ஊழியும் உணராக் காழி அமர்ந்தனே - வேதாகமபுராண சாத்திரங்களிலுள்ள பலத்தை யில்லையென்று ஐய முற்றிருக்கின்ற அமணரும்; கைப்பு, புளிப்பு, கார்ப்பு, துவர்ப்பு, உவர்ப்பு, தித்திப்பு என்கிற அறுவகை ரசங்களையும் உச்சிக்கு முன்னே புசிக்கிறதே பொருளென் றிருக்கிற புத்தரும், ஊழிகாலத்து மறியாமல் மிகவுங் காளிதமான விஷத்தையுடைய காளி என்கிற நாகம் பூசிக்கையாலே சீகாழி யென்கிறதே திருப்பதியாக எழுந்தருளியிருந்தனே.

எச்சன் எழிசையோன் கொச்சையை மெச்சினே:—குரல் - துத்தம் - கைக்கிளை - உழை - இளி - விளரி - தாரம் என்ப தேழிசை. குரலாவது - சங்கத்தொனி, துத்தமாவது - ஆண் மின் பிளிறு, கைக்கிளையாவது - குதிரையின் குரல், உழையாவது - மானின் குரல், இளியாவது - மயிலின் குரல், விளரியாவது - கடலோசை, தாரமாவது-காடையின் குரல் என்னும் நாதங்களையு மெச்சினே. மகத்தான இருடிகள் எல்லாரினும் விருத்தராயுள்ள பராசரப் பிரமரிஷியானவர் மற்ற ரிஷிகளெல்லாரையும், நோக்கி, 'நீங்கள் சமுசாரிக ளொழிய விரதத்தை யனுஷ்டிப்பீரில்லை' என்று அவர்களைத்

னுவசிக்க, அவர்களும் 'நீ மச்சகந்தியைப் புணர்ந்து மச்சகந்தமு முன்னைப்பற்றி விடாம லனுபவிப்பாய்' என்று சபிக்கையாலே, அந்தச் சாபத்தின்படி போய் மச்சகந்தியைப் புணர்ந்து, அந்தத் துர்க்கந்த மிவரைப் பற்றி யொருயோசனை தூரம் துர்க்கந்தித்த படியாலே, 'இது போக்க வல்லவர் பரமேசுவரனை யொழிய வில்லை' என்று சோழியிலே வந்து பரமேசுவரனை அர்ச்சிக்க, பரமேசுவரன் 'உனக்கு வேண்டிய தென்ன?' என்று கேட்க, 'தம்பிரானே! அடியேனைப் பற்றின துர்க்கந்தத்தை விடுவிக்கவேண்டும்' என்று விண்ணப்பஞ் செய்யத், தம்பிரானும் 'இவனென்ன கொச்சை முனியோ?' என்று திருவுளமாய், இவன்மேற் பற்றின துர்க்கந்தத்தையும் போக்கிச் சுகந்தத்தையும் பிரசாதித்தருளிக், கொச்சை யென்கின்ற சந்தான நாமத்தையுந் தரித்தருளிக், கொச்சை யென்கிறதே திருப்பதியாக எழுந்தருளி யிருந்தனை.

ஆறு பதமும், ஐந்தமர் கல்வியும் மறைமுதல் நான்கும் மூன்று காலமும் தோன்ற நின்றனை: - பிராத்தி - பிராத்தியாகாரம், துல்லியம் - துல்லியாதீதம் - வித்தை - அவித்தை யென்கின்ற ஆறு பதங்களும், ஆசு - மதுரம் - சித்திரம் - வித்தாரம் - விரையம் என்கின்ற ஐந்து கல்வியும், இருக்கு - யசுர் - சாமம் - அதர்வண மென்கின்ற நாலு வேதங்களும், செல்காலம் - வருகாலம் - நிகழ்கால மென்கின்ற மூன்று காலமுந் தோன்ற நின்ற மூர்த்தியாயினை.

இருமையின் ஒருமையும்-சத்தி சிவங்களா யிருந்துள்ள இரண்டு மொன்றாய் அர்த்தநாரீசுவரமா யிருந்துள்ளதை.

ஒருமையின் பெருமை-தானே யொரு எல்லை யில்லாத சிவமா யிருந்துள்ளதை.

மறு இலா மறையோர் கழுமல முதுபதிக் கவுணியன் கட்டுரை கழுமல முதுபதிக் கவுணியன் அறியும் - மறவற்ற பிர்மவமிசத்தில் தோன்றித் தீக்கைகளாலே மலத்தைக் கழுவப்பட்ட கவுணியர் கோத்திரத்திலே வந்த சோழிப்பிள்ளை கட்டுரையை விரும்பிக் கழுமல மென்கின்ற முதுபதியிலே யெழுந்தருளின கம் மென்கின்ற பிரம சிரசிலே உண்கின்றவனே அறியும்.

அனைய தன்மையை ஆதலின் - அத் தன்மையாகிய வியல்பினை யுடையை யாதலின்.

நின்னை நினைய வல்லவர் இல்லை நீணிலத்தே-நின்னை நினைக்க வல்லவர்களுக்குப் பிறப்பில்லை என்றவாறு.

திருச்சிற்றம்பலம்.

[இஃது சிவபாத விருதயர் நித்திய கர்மங்களை நிறைவேற்றிய வுடனே தமது குமாரராகிய திருஞானசம்பந்த சுவாமிகளால் அருளிச் செய்யப்பட்ட திருப்பதிகங்களை ஓதிவிட்டே போசனஞ் செய்யும் வழக்கத்தைக் கொண்டனர். இவ்வாறு சில காலம் நிகழப், பிள்ளையார் தாம் பாடுவன பெருகுதலைத் திருவுளத்தடைத்து, தந்தையார் கொள்கைக்குத் தடைவராவண்ணம் அதுவரையும் இயற்றியுள்ள திருப்பதிகங்களின் பொருள்கள் யாவு மமைத்து இத் திருவெழுகூற்றிருக்கையைத் திருவாய் மலர்ந்தருளினர். ஆகலின், இதனை நாடோறும் அன்புடன் ஓதுவோர் சிவப்பிரசாத மெய்துவர் என்பது சத்தியம்.]

---

திருஞானசம்பந்தமூர்த்திநாயனர்

## திருக்கடவூர்மயானம்.

இரண்டாந் திருமுறை.

பண் - காந்தாரம்

---

சிவனுருவம்.

---

திருச்சிற்றம்பலம்

வரிய மறையார் பிறையார் மலையோர் சிலையா வணக்கி
பெரிய மதில்க ளெய்தா ரெறியு முசல முடையார்
கரிய மிடறு முடையார் கடவூர் மயான மமர்ந்தார்
பெரிய விடைமேல் வருவா ரவரெம் பெருமா னடிகளே.

(ப - ரை.) வரிய மறையார் - மேன்மையையுடைய வேதங்களை யுடையவர்; பிறையார் - பிறையை யுடையவர்; மலை-மலையை, ஓர் சிலையா வணக்கி - ஒரு வில்லாக வளைத்து, மதில்கள்-மும்மதில்கள், எரிய - எரிந்துபோம்படி, எய்தார் அம்பெய்தவர்; எறியும் முசலம் உடையார் - எறியப்படுகிற முசலத்தை யுடையவர்; கரிய மிடறும் உடையார் - கரிய கண்டத்தையு முடையவர்; கடவூர் மயானம் அமர்ந்தார் - திருக்கடவூர் மயானத்தையும் விரும்பினர்; பெரிய விடைமேல் வருவார் - பெரிய இடபத்தின்மேல் ஏறி வருவார்

(இத்தன்மையர் யாரோ) அவர் - அவரே, எம்பெருமான் அடிகள் - எம்பெருமானாகிய சுவாமிகளாவார், எ - று.

(வி-ரை.) 'மலை' என்றது மேருமலையை. 'மதில்கள்' என்றது முப்புரத்தை; இந்த முப்புரம் இரும்பு வெள்ளி பொன் என்பவற்றாற் செய்யப்பட்டுச் சங்கமரூபமா யிருப்பவை. முசலம் - ஓராயுத விசேடம். (௧)

மங்கை மணந்த மார்பர் மழுவாள் வலனொன் றேந்திக்
கங்கை சடையிற் கரந்தார் கடவூர் மயான மமர்ந்தார்
செங்கண் வெள்ளே றேறிச் செல்வஞ் செய்ய வருவா
ரங்கை யேறிய மறியா ரவரெம் பெருமா னடிகளே.

(ப - ரை.) மங்கை மணந்த மார்பர் - உமாதேவி கலந்த மார்பினை யுடையவர்; வலன் - வலப்பக்கத்தில், மழு வாள் ஒன்று ஏந்தி- மழுவாகிய வாளொன்றைத் தாங்கி, கங்கை - கங்கையை, சடையில் கரந்தார் - சடையில் மறைத்தவர்; கடவூர் மயானம் அமர்ந்தார்—, செங்கண் வெள் ஏறு ஏறி - செவந்த கண்களையுடைய வெள்ளையிடபத்திலேறி, செல்வஞ் செய்ய வருவார்—, அம் கை ஏறிய மறியார் - அழகிய கையிலேறிய மானை யுடையவர், (இத்தன்மையர் யாரோ) அவர் - அவரே, எம்பெருமான் அடிகள் - எம்பெருமானாகிய சுவாமிகள், எ - று.

(வி - ரை.) தம்மைத் தரிசிப்பவர்க்குச் செல்வத்தை யருள் செய்பவ ராதலால் 'செல்வஞ் செய்ய வருவார்' என்றார். (௨)

ஈட லிடப மிசைய வேறி மழுவொன் றேந்திக்
காட திடமா வுடையார் கடவூர் மயான மமர்ந்தார்
பாட லிசைகொள் கருவி படதம் பலவும் பயில்வா
ராட லரவ முடையா ரவரெம் பெருமா னடிகளே.

(ப - ரை.) ஈடு அல் இடபம் - நிகரற்ற இடபத்தின்மேல், இசைய ஏறி - பொருந்த ஏறி; மழு ஒன்று ஏந்தி - மழுவொன்றைத் தாங்கி; காடது இடமா உடையார்-காடே யிடமாக வுடையவர்; கடவூர் மயானம் அமர்ந்தார்—, பாடல் இசை கொள் கருவி-பாடலிசையைக் கொண்ட கருவிகளாகிய, படதம் பலவும் பயில்வார் - வாத்திய விசேடங்கள் எல்லாவற்றையும் பயில்பவர்; ஆடல் அரவம் உடையார் - ஆடுகின்ற பாம்பை யுடையவர்; (இத் தன்மையர் யாரோ) அவர் - அவரே, எம்பெருமான் அடிகள்—, எ - று.

(வி - ரை.) ஆடலரவம் - படமெடுத்தாடுதலையுடைய பாம்பு. 'காடு' இடுகாடு சுடுகாடு என்னு மிரண்டனையுங் குறிக்கும்; இவ் விரண்டற்கும் 'மயானம்' என்னும் பெயர் வழங்கும். காடது என் பதில் அது பகுதிப்பொருள் விகுதி. காடு அது எனப் பிரித்து காடாகிய அது என்று உரைத்தலுமாம். (௩)

இறைநின் றிலங்கு வளையா ளிளையா ளொருபா லுடையார்
மறைநின் றிலங்கு மொழியார் மலையார்மனத்தின்மிசையார்
கறைநின் றிலங்கு பொழில்சூழ் கடலூர் மயான மமர்ந்தார்
பிறைநின் றிலங்கு சடையா ரவரெம் பெருமா னடிகளே.

(ப - ரை) இறை நின்று இலங்கு வளையாள் - கையிறையில் நிலைபெற்று விளங்குகின்ற வளையலை யுடையவள், இளையாள்-இளம் பருவ முடையவள், (அந்த உமாதேவியை) ஒருபால் உடையார் - ஒருபாகத்தி லுடையவர்; மறை நின்று இலங்கும் மொழியார் - வேதங்கள் நின்று விளங்குகிற திருவாக்கை யுடையவர்; மலையார் மனத்தின் மிசையார் - மலையாதவருடைய மனத்தி லிருப்பவர்; கறை நின்று இலங்கு பொழில் சூழ் - கருமை நிலைபெற்று விளங்கு கிற சோலைகள் சூழ்ந்த, கடலூர் மயானம் அமர்ந்தார்—; பிறை நின்று இலங்கு சடையார் - பிறை நின்று விளங்குகிற சடையை யுடைய வர்; (இத்தன்மையர் யாரோ) அவர்-அவரே, எம்பெருமானடிகள்—, எ - று.

(வி - ரை.) 'ஒருபால்' என்றது இடப்பாகத்தை. மலையார் - பிரமிக்காதவர் (ஞானியர்). கறை - கறுப்பு; இது மாச்செறிவினு லுண்டாகிய இருள். (௪)

வெள்ளை யெருத்தின் மிசையார் விரிதோ டொருகா திலங்கத்
துள்ளு மிளமான் மறியார் சுடர்பொற் சடைக டுலங்கக்
கள்ள நகுவெண் டலையார் கடலூர் மயான மமர்ந்தார்
பிள்ளை மதிய முடையா ரவரெம் பெருமா னடிகளே.

(ப - ரை.) வெள்ளை எருத்தின் மிசையார் - வெள்ளையிடபத் தின் மேலவர்; விரி தோடு ஒரு காது இலங்க - விரிந்த குழை யானது ஒரு காதில் விளங்க, துள்ளும் இளமான் மறியார் - துள்ளு கின்ற இளமான் கன்றை யுடையவர்; சுடர் பொன் சடைகள் துல ங்க - பிரகாசிக்கின்ற பொன்போலுஞ் சடைகள் விளங்காநிற்க, கள்ளம் - கபடத்தையுடைய, நகு வெண் தலையார் - சிரிக்கின்ற

வெண்டலையை யுடையவர்; கடவூர் மயானம் அமர்ந்தார்—, பிள்ளை மதியம் உடையார் - இளம் பிறையை யுடையவர், (இத்தன்மையர் யாரோ) அவர் - அவரே, எம்பெருமான் அடிகள்—, எ - று.

(வி - ரை.) 'மதியம்' என்பதில் அம் சாரியை. 'மதி' என்பதற்கு 'அமிர்தத்தை யுடையது' என்பது பொருள். (ரு)

பொன்றாதுதிரு மணங்கொள் புனைபூங் கொன்றைபுனைந்தா
ரொன்றா வெள்ளே றுயர்த்த துடையா ரதுவே யூர்வார்
கன்றா வினஞ்சூழ் புறவிற் கடவூர் மயான மமர்ந்தார்
பின்றாழ் சடையா ரொருவ ரவரெம் பெருமா னடிகளே.

(ப - ரை.) பொன் தாது உதிரும் - பொன்போலும் மகரந்தம் உதிர்கின்ற, மணம் கொள் - வாசனையைக் கொண்ட, புனை - அலங்கரிக்கப்பட்ட, பூங்கொன்றை புனைந்தார் - கொன்றை மலர் மாலையைத் தரித்தவர்; உயர்த்தது - உயர்த்தினதாகிய, ஒன்று வெள் ஏறு உடையார் - சமானமில்லாத வெள்ளையிடபத்தை யுடையவர், அதுவே ஊர்வார் - அதனையே நடத்துமவர்; கன்று ஆ இனம் சூழ் புறவில் - கன்றுகளையுடைய பசுக்களின் இனஞ் சூழ்ந்த புறவிலுள்ள, கடவூர் மயானம் அமர்ந்தார்—; பின் தாழ் சடையார்- பின்னே தொங்குகிற சடையை யுடையவர், ஒருவர் - ஒப்பற்றவர், (இத்தன்மையர் யாரோ) அவர்-அவரே, எம்பெருமான் அனடிகள்—, எ - று.

(வி - ரை.) 'பூங்கொன்றை' என்பதைக் கொன்றைப்பூ என முன் பின்னாக மாற்றிப் பொரு ளுரைக்கப்பட்டது. உயர்த்தார் - கொடியாக வெடுத்தவர். புறவு - முல்லைநிலம். (சு)

பாச மான களைவார் பரிவார்க் கமுத மனையா
ராசை தீரக் கொடுப்பா ரலங்கல் விடைமேல் வருவார்
காசை மலர்போன் மிடற்றார் கடவூர் மயான மமர்ந்தார்
பேச வருவா ரொருவ ரவரெம் பெருமா னடிகளே.

(ப - ரை.) பாசமான களைவார் - பாசமானவற்றை யொழிப்பவர்; பரிவார்க்கு அமுதம் அனையார் - விரும்புவோருக்கு அமிர்தத்தை நிகர்ப்பவர்; ஆசை தீர கொடுப்பார் - ஆசை யடங்கக் கொடுப்பவர்; அலங்கல் விடைமேல் வருவார் - அசைதலுடைய இடபத்தின்மேலேறி வருபவர்; காசை மலர்போல் மிடற்றார்-காயாம்பூவை நிகர்த்த கண்டத்தை யுடையவர்; கடவூர் மயானம் அமர்ந்தார்—; பேச வரு

வார் - புகழ வருவார், ஒருவர்-ஒப்பற்றவர்; (இத்தன்மையர் யாரோ) அவர் - அவரே, எம்பெருமான் அடிகள்—, எ - று.

(வி-ரை.) பரிதல்-விரும்புதல் (அன்பு செய்தல்). 'பாசமான' என்பதில் ஆன-வினையாலணையும் பெயர். காசைமலர் நீலநிறமாத லால் இறைவரது நீலகண்டத்துக் குவமையாயிற்று. பேசல் - புகழ்தல். (எ)

செற்ற வரக்க னலறத் திகழ்சே வடிமெல் விரலாற்
கற்குன் றடர்த்த பெருமான் கடவூர் மயான மமர்ந்தார்
மற்றொன் றிணையில் வலிய மாசில் வெள்ளி மலைபோற்
பெற்றொன் றேறி வருவா ரவரெம் பெருமா னடிகளே.

(ப - ரை.) செற்றம் அரக்கன் அலற - கோவத்தையுடைய அரக்கனாகிய ராவணன் அலறும்படி, திகழ் - விளங்குகிற, சேவடி - திருவடியின், மெல் விரலால் - மெல்லிய விரலினால், கல் குன்று அடர்த்த பெருமான் - கற்களையுடைய கைலாயமலையை யழுத்தின பெருமான்; கடவூர் மயானம் அமர்ந்தார்—; மற்றொன்று இணை இல் - மற்றொன்று இணையில்லாத, வலிய-வலியதாகிய, மாசு இல் - குற்றமற்ற, வெள்ளிமலைபோல் - வெள்ளிமலைபோன்ற, பெற்றம் ஒன்று ஏறி வருவார் - இடபமொன்றின்மீதேறி வருபவர், (இத்தன்மையர் யாரோ) அவர் - அவரே, எம்பெருமான் அடிகள்—, எ - று.

(வி -.ரை.) கயிலாயமலை வெள்ளியா லியன்றதாயினும் சாதி பற்றி அதனைக் 'கற்குன்று' என்றார். பெற்றம் - இடபம்; அது ஈறு தொகுத்தலாய்ப் 'பெற்று' என வந்தது. (அ)

வருமா கரியி னுரியார் வளர்புன்
சடையார் விடையார்
கருமா னுரிதோ லுடையார் கடவூர்
மயான மமர்ந்தார்
திருமா லொடுநான் முகனுந் தேர்ந்துங்
காணா முன்னொண்ணாப்
பெருமா னெனவும் வருவா ரவரெம்
பெருமா னடிகளே.

(ப - ரை.) வரு - வந்த, மா - பெரிய, கரியின் உரியார் - யானைத்தோலை யுடையவர்; வளர் புன் சடையார் - வளர்ந்த புன்

சடையை யுடையவர்; விடையார் - இடபவாகனத்தை யுடையவர்; கருமான் உரி தோல் உடையார் - கரிய மானினது உரிக்கப்பட்ட தோலை யுடையவர்; கடவூர் மயானம் அமர்ந்தார்—; திருமாலொடு நான்முகனும் - திருமாலோடு பிரமனும், தேர்ந்தும் - தேடியும், முன் காணவொண்ணு - முற்காலத்திற் காணவொண்ணாத, பெருமான் எனவும் வருவார் - பெருமான் என்று சொல்லவும் வருவார் (இத்தன்மையர் யாரோ,) அவர்-அவரே, எம்பெருமான் அடிகள்—, எ - று.

(வி-ரை.) கரி-கரத்தை யுடையது (துதிக்கையை யுடையது).

தூய விடைமேல் வருவார் துன்னா ருடைய மதில்கள்
காய வேவச் செற்றார் கடவூர் மயான மமர்ந்தார்
தீய கருமஞ் சொல்லுஞ் சிறுபுன் றேரா ரமணர்
பேய்பே யென்ன வருவா ரவரெம் பெருமா னடிகளே.

(ப - ரை.) தூய - பரிசுத்தமாகிய, விடைமேல் வருவார் - இடபமீதேறி வருபவர்; துன்னாருடைய மதில்கள்-பகைவருடைய மதில்கள், காய வேவ செற்றார் - வெந்தொழிய அழித்தவர்; கடவூர் மயானம் அமர்ந்தார்—; தீய கருமம் சொல்லும் - கெட்ட காரியங்களைச் சொல்லுகிற, சிறு புன் தேரர் அமணர் - மிக அற்பராகிய தேரரும் அமணரும், பேய் பேய் என்ன வருவார் - பேய்பே யென்னும்படி வருபவர், (இத்தன்மையர் யாரோ) அவர் - அவரே, எம்பெருமான் அடிகள்—, எ - று.

(வி - ரை.) 'துன்னார்' என்றது திரிபுரவாசிகளை. செறல் - அழித்தல். தேரர் - சாக்கியரி லொருசாரார். (௧0)

மாவம் பொழில்சூழ் கடவூர் மன்னு மயான மமர்ந்த
வரவ மசைத்த பெருமா னகல மறிய லாகப்
பரவு முறையே பயிலும் பந்தன் செஞ்சொன் மாலை
யிரவும் பகலும் பரவி நினைவார் வினைக ளிலரே.

(ப - ரை.) மாவம் பொழில் சூழ் - மாவஞ் சோலை சூழ்ந்த, மன்னும் - நிலைபெற்ற, கடவூர் மயானம் அமர்ந்த - கடவூர் மயானத்தை விரும்பின, அரவம் அசைத்த பெருமான் - பாம்பைக் கச்சையாகக் கட்டின பெருமானது, அகலம் - பெருமையை, அறியலாக - அறியும்படி, பரவும் முறையே - வழிபடுதற்குரிய முறையாகவே, பயிலும் - பழகுகின்ற, பந்தன்-சம்பந்தனது, செம் சொல் மாலை - செஞ்சொல் மாலைகளை, இரவும் பகலும் - இரவினும்

பகலினும், பாவி நினைவார் - துதித்து நினைப்பவர், வினைகள் இலர் - வினைகளில்லாதவராவர், எ - று.

(வி - ரை.) மரவம் - குங்குமமாம். அசைத்தல் - கட்டுதல். சம்பந்தன் என்பது 'பந்தன்' என முதற் குறைந்து வந்தது. 'பயில் சம்பந்தன்' என்றும் பாடம். (கக)

திருச்சிற்றம்பலம்.

[இந்தத் திருப்பதிகம், திருஞான சம்பந்த சுவாமிகள் தலங்கடோறுஞ் சென்று தரிசித்து இத் தலத்துக்கு வந்து, அங்கிருந்த கலந்த நட்புப் பெருமை செறிந்த குங்கிலியக்கலய நாயனாரது திருமத்திற் கெழுந்தருளி அவர் அன்போடும் அமைத்தருளிய விருந்தை இனிதாக விரும்பி அங்குள்ள கோவிலிற் சென்று தரிசித்தபோது பாடியருளியது.]

---

## திருநாவுக்கரசு நாயனார்

## கோயிற் * றிருவிருத்தம்

நான்காந் திருமுறை.

பண்-கொல்லி.

---

### சிவனுருவம்.

திருச்சிற்றம்பலம்.

பாளை யுடைக்கமு கோங்கிப்பன் மாட
நெருங்கியெங்கும்
வாளை யுடைப்புனல் வந்தெறி வாழ்வயற்
றில்லைதன்னு
ளாள வுடைக்கழற் சிற்றம் பலத்தா
னுடல்கண்டாற்
பீளை யுடைக்கண்க ளாற்பின்னைப் பேய்த்தொண்டர்
காண்பதென்னே.

---

* கட்டளைக் கலித்துறையை அக்காலத்துத் திருவிருத்தமென வழங்குதல் வழக்கம்போலும். இதனை வைணவத்தும் ஆழ்வாரும் திருவிருத்தமெனக் குறியிட் டாளுதல் காண்க.

(ப - ரை.) பாளை உடை கமுகு - பாளைகளையுடைய கமுக மரங்கள், ஓங்கி - உயர்ந்து, எங்கும் - எவ்விடத்தும், பல் மாடம் நெருங்கி - பல மாடங்கள் அடர்ந்து, வாளை உடை புனல் - வாளை மீன்களையுடைய நீரானது, வந்து எறி வாழ் வயல் - வந்து அலை வீசித் தங்கிய வயல்வளமுள்ள, தில்லைதன்னுள் - தில்லையில், ஆள - யாவரையும் ஆளும்பொருட்டு, கழல் உடை - வீரக்கழலை யணிந்த, சிற்றம்பலத்து - சிற்சபையில், அரன் - சிவபெருமானது, ஆடல் - திருநடனத்தை, கண்டால்-சேவித்தால், பேய்த்தொண்டர் - பேயடியார், பின்னை - பிறகு, பீளை உடை கண்களால் - பீளையையுடைய கண்களைக்கொண்டு, காண்பது - காண்பதற் குரியது, என் - யாது? எ - று.

(வி - ரை.) சித்தம்பலம் - ஞானசபை (சிற்சபை, சிதாகாசம்.) இது சிற்றம்பலம் என மரூஉவாயிற்று. (க)

பொருவிடை யொன்றுடைப் புண்ணிய மூர்த்தி
 புலியதள
னுருவுடை யம்மலை மங்கை மணாள
 னுலகுக்கெல்லாந்
திருவுடை யந்தணர் வாழ்கின்ற தில்லைச்சிற்
 றம்பலவன்
றிருவடி யைக்கண்ட கண்கொண்டு மற்றினிக்
 காண்பதென்னே.

(ப-ரை.) பொரு விடை ஒன்று உடை-போர் செய்கிற இடப மொன்றையுடைய, புண்ணியமூர்த்தி-அறவடிவன்; புலி அதளன் - புலித்தோலை யுடையவன்; உரு உடை - அழகையுடைய, அ - அந்த, மலை மங்கை மணாளன் - மலைமாது நாயகன்; உலகுக்கு எல்லாம் - உலக முழுமைக்கும், திரு உடை அந்தணர் - அலங்காரமாகவுள்ள அந்தணர்கள், வாழ்கின்ற - உறைகின்ற, தில்லைச் சிற்றம்பலவன் - தில்லைச் சிற்றம்பலத்தானது, திருவடியைக் கண்ட கண்கொண்டு - திருவடியைக் கண்ட கண்களால், மற்று இனி காண்பது - வேறே யினிக் காண்பதற் குரியது, என்-யாது? எ - று.

(வி - ரை.) பொருவிடை - வினைத்தொகைநிலைத்தொடர். மூர்த்தம் - வடிவம்; மூர்த்தி - வடிவத்தை யுடையவன். திருவுடைத் தில்லை, அந்தணர் வாழ்கின்ற தில்லை என வியையும். அந்தணர் - தில்லை மூவாயிரவர். (உ)

தொடுத்த மலரொடு தூபமுஞ் சாந்துங்கொண்
டெப்பொழுது
மடுத்து வணங்கு மயனொடு மாலுக்குங்
காண்பரியான்
பொடிக்கொண் டணிந்துபொன் னாகிய தில்லைச்சிற்
றம்பலவ
னுடுத்த துகில்கண்ட கண்கொண்டு மற்றினிக்
காண்பதென்னே.

(ப - ரை.) தொடுத்த மலரொடு - தொடுக்கப்பட்ட பூமாலைகளோடு, தூபமும் சாந்தும் கொண்டு - தூபத்தையும் சந்தனத்தையுங் கொண்டு, எப்பொழுதும் - எப்போதும், அடுத்து வணங்கும் - அடுத்து வணங்குகிற, அயனொடு மாலுக்கும் காண்பு அரியான் - பிரமனொடு மாலுக்கும் காண்டல் அருமையானவன், பொடி கொண்டு அணிந்து - பொடியைக்கொண்டு தரித்த, பொன் ஆகிய-பொன்னாலியன்ற, தில்லைச் சிற்றம்பலவன்-தில்லைச் சிற்றம்பலத்தை யுடையவன், உடுத்த - உடுத்திருக்கிற, துகில் - பரிவட்டத்தை, கண்ட - பார்த்த, கண்கொண்டு - கண்களால், மற்று இனிக் காண்பது—, என் - யாது? எ - று.

(வி - ரை.) காண்பு - காண்டல். பொடி - திருவெண்ணீறு. தொடுத்தல் - கட்டுதல். தொடுத்தமலர் - மலர்மாலை. அடுத்து - கிட்டி. கொண்டு - மூன்றாதவன் சொல்லுருபு. (ட)

வைச்ச பொருணமக் காகுமென் றெண்ணி
நமச்சிவாய
வச்ச மொழிந்தே னணிதில்லை யம்பலத்
தாடுகின்ற
பிச்சன் பிறப்பிலி * பேர்நந்தி யுந்தியின்
மேலசைத்த
கச்சி னழகுகண் டாற்பின்னைக் கண்கொண்டு
காண்பதென்னே.

(ப - ரை.) நமச்சிவாய - ஸ்ரீ பஞ்சாக்ஷரமானது, நமக்கு - எமக்கு, வைச்ச பொருள் ஆகும் என்று எண்ணி - நிக்ஷேப தனமாகுமென்று நினைத்து, அச்சம் ஒழிந்தேன் - பயந் தவிர்ந்தேன்; அணி-

---

* இதனை, "நந்திவாம்" என்னும் திருக்கோவையாருள் பேராசிரியரும் நந்தி யென்பதொரு திருநாம மென்பர்.

அழகாகிய, தில்லை அம்பலத்து ஆடுகின்ற தில்லையம்பலத்தில் நடிக்கிற, பிச்சன் - பித்தன், பிறப்பு இலி - பிறப்பில்லாதவன், பேர் நந்தி - பெரிய நந்தி, உந்தியின் மேல் அசைத்த - திருவுந்தியின் மேற் கட்டின, கச்சின் அழகு கண்டால் - கச்சையி னழகைப் பார்த்தால், பின்னை - பிறகு, கண் கொண்டு - கண்களால், காண்பது என்—? எ - று.

(வி - ரை.) ஸ்ரீ பஞ்சாக்ஷரம் - திருவைந்தெழுத்து. வைச்ச - புதைத்துவைத்த. பிச்சன் - பைத்தியங்கொண்டவன்; (அன்பர்மீது மிகு விருப்பங் கொண்டவன்) ஆஶ்ரிதவ்யாமோஹன் என்பர் வடநூலார். (ச)

செய்ஞ்ஞின்ற நீல மலர்கின்ற தில்லைச்சிற்
றம்பலவன்
மைஞ்ஞின்ற வொண்கண் மலைமகள் கண்டு
மகிழ்ந்துநிற்க
நெய்ஞ்ஞின் றெரியும் விளக்கொத்த நீல
மணிமிடற்றான்
கைஞ்ஞின்ற வாடல்கண் டாற்பின்னைக் கண்கொண்டு
காண்பதென்னே.

(ப - ரை.) செய்ஞ்ஞின்ற - வயல்களி லிருக்கிற, நீலம் - கருங்குவளை மலர்கள், மலர்கின்ற - விரிகின்ற, தில்லைச் சிற்றம்பலவன்—, மைஞ்ஞின்ற - மை யெழுதப்பெற்ற, ஒள் கண் - அழகிய கண்களையுடைய, மலைமகள் - பார்வதிதேவியானவள், கண்டு மகிழ்ந்து நிற்க - கண்டு களித்து நிற்க, நெய்ஞ்ஞின்று எரியும் விளக்கு ஒத்த - நெய்யிருந் தெரிகின்ற தீபத்தை நிகர்த்த, நீல மணி மிடற்றான் - நீலமணி போலுங் கண்டத்தை யுடையவன், கைஞ்ஞின்ற ஆடல் கண்டால் - ஒப்பனை யமைந்த திருநடனத்தைக் கண்டால், பின்னை கண் கொண்டு காண்பது என்—? எ - று.

(வி - ரை.) நின்ற என்பது 'ஞின்ற' எனப் போலியாயிற்று. நீலம் - முதலாகுபெயர். 'நீலமணி' என்பதற்கு 'நீல நிறமும் அழகு முள்ள' என்றுரைத்தலுமாம்; அழகாவது, நஞ்சுண்டு தேவர் முதலியோரைக் காத்தருளினதனு லுண்டான சோபை. (ரு)

ஊனத்தை நீக்கி யுலகறி யவென்னை
யாட்கொண்டவன்

றேனொத் தெனக்கினி யான்றில்லைச் சிற்றம்
பலவனெங்கோன்
வானத் தவருய்ய வன்னஞ்சை யுண்டகண்
டத்திலங்கு
மேனத் தெயிறுகண் டாற்பின்னைக் கண்கொண்டு
காண்பதென்னே.

(ப - ரை.) ஊனத்தை நீக்கி - குற்றத்தை நீக்கி, உலகு அறிய - உலக மறியும்படி, என்னை ஆட்கொண்டவன் - என்னை யடிமை கொண்டவன்; எனக்கு—, தேன் ஒத்து இனியான் - தேன்போன்று இனிமையைத் தருபவன்; தில்லைச் சிற்றம்பலவன்—, எம் கோன் - எம்மிறைவன்; வானத்தவர் - தேவர்கள், உய்ய - பிழைக்க, வல் நஞ்சை உண்ட - வலிய நஞ்சைப் பருகின, கண்டத்து - கண்டத்தில், இலங்கும் - விளங்குகிற, ஏனத்து எயிறு கண்டால் - பன்றியின் கொம்பைக் கண்டால், பின்னை கண்கொண்டு காண்பது என்—? எ - று.

(வி - ரை.) தேவர்கள் விண்ணுலகத்துள்ளவர்க ளாதலால் அவர்களை 'வானத்தவர்' என்றார். ஏனம் - பன்றி. எயிறு - பல்; அது இங்குக் கொம்புக்காயிற்று. (சு)

தெரித்த கணையாற் றிரிபுர மூன்றுஞ்செந்
தீயின்மூழ்க
வெரித்த விறைவ னிமையவர் கோமா
னிணையடிக
டரித்த மனத்தவர் வாழ்கின்ற தில்லைச்சிற்
றம்பலவன்
சிரித்த முகங்கண்ட கண்கொண்டு மற்றினிக்
காண்பதென்னே.

(ப - ரை.) தெரித்த கணையால் - தெரிந்தெடுத்த அம்பினால், திரிபுரம் மூன்றும் - சஞ்சரிக்கின்ற புரங்கள் மூன்றும், செந்தீயில் மூழ்க - செந்தீயில் குளிக்கும்படி, எரித்த இறைவன் - எரித்துவிட்ட தலைவன், இமையவர் கோமான் - தேவர் பெருமான், (அவனது) இணை அடிகள் - திருவடி யிணையை, தரித்த - தாங்கின, மனத்தவர் - மனத்தை யுடையவர், வாழ்கின்ற—, தில்லைச் சிற்றம்பலவன்—, சிரித்த முகம் - நகைத்த முகத்தை, கண்ட - பார்த்த, கண்கொண்டு - கண்களால், மற்று இனி காண்பது என்—? எ-று.

(வி - ரை.) மூன்று என மேல் வருதலால் 'திரிபுரம்' என்பதற்குச் 'சஞ்சரிக்கிற புரங்கள்' எனப் பொருள் கூறலாயிற்று. (எ)

சுற்று மமரர் சுரபதி நின்றிருப்
பாதமல்லாற்
பற்றொன் றிலோமென் றழைப்பப் பரவையு
ணஞ்சையுண்டான்
செற்றங் கநங்கனைத் தீவிழித் தான்றில்லை
யம்பலவ
னெற்றியிற் கண்கண்ட கண்கொண்டு மற்றினிக்
காண்பதென்னே.

(ப - ரை.) சுற்றம்-சூழ்ந்த, அமரர்-அமரர்கள், சுரபதி-தேவர் பெருமான், (இவர்கள்) நின் - உனது, திருப்பாதம் அல்லால் - திருவடியன்றி, பற்று ஒன்று இலோம் என்று அழைப்ப - ஒரு பற்றுமிலமென்று கூவ, பரவையுள்ள - கடலி லுண்டாகிய, நஞ்சை உண்டான் - நஞ்சை யுண்டவன், அங்கு - அவ்விடத்து, அநங்கனை செற்று - மன்மதனை யழிக்க, தீ விழித்தான் - நெருப்புக் கண்ணைத் திறந்தவன், தில்லையம்பலவன்—, (அவனது) நெற்றியில் கண் - நெற்றிக் கண்ணை, கண்ட கண்கொண்டு - கண்ட கண்களால், மற்று இனி காண்பது என்—, எ - று.

(வி-ரை.) அமரர் - கற்ப காலத்தளவும் இறவாதவர், (தேவர்கள்); கற்பத்தி லிறப்பவரை அமரர் என்றது மங்கலவழக்கு. சுரபதி-இந்திரன். பரவை - தொழிலாகுபெயர். 'செற்று' செற வென்னும் பொருளில் வந்தது. (அ)

சித்தத் தெழுந்த செழுங்கம லத்தன்ன சேவடிகள்
வைத்த மனத்தவர் வாழ்கின்ற தில்லைச்சிற் றம்பலவன்
முத்தும் வயிரமு மாணிக்கந் தன்னுள் விளங்கியதூ [னே.
மத்த மலர்கண்ட கண்கொண்டு மற்றினிக் காண்பதென்

(ப - ரை.) சித்தத்து எழுந்த - மனத்திற் பூத்த, செழுங் கமலத்து அன்ன - செழுந்தாமரை யொத்த, சேவடிகள் - திருவடிகளை, வைத்த - இருத்திவைத்த, மனத்தவர் - மனத்தை யுடையவர், வாழ்கின்ற - உறைகின்ற, தில்லைச் சிற்றம்பலவன் - தில்லைச்சிற்றம்பலவனது, முத்தும் வயிரமும் மாணிக்கந் தன்னுள்—, விளங்கியது - விளங்கிய தாகிய, ஊமத்த மலர் - ஊமத்த மலரை, கண்ட கண் கொண்டு-கண்ட கண்களால், மற்று இனிக் காண்பது என்—, எ-று.

(வி - ரை.) சித்தத்து - அன்பாது மனத்திடத்தில். வயிரம் - வச்சிரம். (கூ)

தருக்கு மிகுத்துத்தன் றோள்வலி யுன்னித் தடவரையை
வரைக்கை களாலெடுத் தார்ப்ப மலைமகள் கோன்சிரித்து
வரக்கன் மணிமுடி பத்து மணிதில்லை யம்பலவ [னே.
னெருக்கி மிதித்த விரல்கண்ட கண்கொண்டு காண்பதென்

(ப - ரை.) தருக்கு மிகுத்து-தருக்கு அதிகரித்து, தன் தோள் வலி உன்னி - தன் தோள் வலியை நினைத்து, தடவரையை - பெரிய கைலாய மலையை, வரை கைகளால் எடுத்து - வரைகளை யுடைய கைகளால் தூக்கி, ஆர்ப்ப - ஆரவாரிக்க, மலைமகள் கோன் - பார்வதி நாதன், சிரித்து-நகைத்து, அரக்கன் மணி முடி பத்தும் - ராவணாசுரனது மணி முடிகள் பத்தும், அணி தில்லை யம்பலவன் - அழகிய தில்லை யம்பலவன், நெருக்கி மிதித்த விரல் - நெருக்கி மிதித்த விரலை, கண்ட கண்கொண்டு - கண்ட கண்களால், காண்ப தென்—? எ - று.

(வி - ரை.) தருக்கு - செருக்கு. வரைக் கைகளால் - மலை போன்ற கைகளால் எனினுமாம். (கo)

திருச்சிற்றம்பலம்.

[கோயில் என்னும் இத்தலம் சோழநாட்டில் உள்ளது. சுவாமி பெயர் - சபாநாதர். தேவியார் - சிவகாமியம்மை.]

---

திருநாவுக்கரசுநாயனுர்

## திருப்பூவணம்.

ஆருந் திருமுறை.

திருத்தாண்டகம்.

---

### சிவனுருவம்.

---

திருச்சிற்றம்பலம்.

வடிவேறு திரிசூலந் தோன்றுந் தோன்றும்
வளர்சடைமே லிளமதியந் தோன்றுந் தோன்றும்
கடியேறு கமழ்கொன்றைக் கண்ணி தோன்றுங்
காதில்வெண் குழைதோடு கலந்து தோன்று

இடியேறு களிற்றுரிவைப் போர்வை தோன்று
மெழிறிகழுந் திருமுடியு மிலங்கித் தோன்றும்
பொடியேறு திருமேனி பொலிந்து தோன்றும்
பொழிறிகழும் பூவணத்தெம் புனித ணூர்க்கே.

(ப-ரை.) பொழில் திகழும் - சோலைகள் விளங்குகின்ற, பூவணத்து-திருப்பூவணத்தி லெழுந்தருளிய, எம் புனிதனுர்க்கு-எமது பரிசுத்தராகிய சிவபெருமானுர்க்கு, வடிவு ஏறு - வடித்தல் மிகுந்த, திரிசூலம் தோன்றும் தோன்றும் - திரிசூலம் தோன்றாநிற்கும் தோன்றாநிற்கும்; வளர் சடைமேல் - நீண்ட சடையின்மீது, இளமதியம் தோன்றும் தோன்றும் — இளம்பிறை தோன்றாநிற்கும் தோன்றாநிற்கும்; கடி ஏறு - வாசனை மிகுந்த, கமழ் - பரிமளிக்கிற, கொன்றைக் கண்ணி தோன்றும்-கொன்றை மலர்மாலை தோன்றாநிற்கும்; காதில்-செவிகளில், வெள் குழை தோடு கலந்து தோன்றும் - வெள்ளிய குழையும் தோடும் சேர்ந்து தோன்றாநிற்கும்; இடி ஏறு-முழக்க மிகுந்த, களிறு உரிவை போர்வை தோன்றும்-யானைத் தோலாகிய போர்வை தோன்றாநிற்கும்; எழில் திகழும் - அழகு விளங்காநின்ற, திருமுடியும் இலங்கி தோன்றும் - திருமுடியும் விளங்கித் தோன்றாநிற்கும்; பொடி ஏறு திருமேனி - வெண்பொடி மிகுதியா யணியப்பெற்ற திருமேனியானது, பொலிந்து தோன்றும்-விளங்கித் தோன்றாநிற்கும், எ - று.

(வி - ரை.) திரிசூலம் - முத்தலைச் சூலம். கொன்றை-முதலாகுபெயர். கண்ணி - முடிச்சுக்களை யுடையது. (க)

ஆணாகிப் பெண்ணாய வடிவு தோன்று
மடியவர்கட் காரமுத மாகித் தோன்று
மூணாகி யூர்திரிவா ணுகித் தோன்று [மேற்
மொற்றைவெண் பிறைதோன்றும் பற்றூர் தம்
சேணாக வரைவில்லா லெரித்த ரேன்றுஞ்
செத்தவர்த மெலும்பிணற் செறியச் செய்த
பூணாணு மரைஞாணும் பொலிந்து தோன்றும்
பொழிறிகழும் பூவணத்தெம் புனித ணூர்க்கே.

(ப-ரை.) பொழில் திகழும் பூவணத்து எம் புனிதனுர்க்கு—, ஆணாகி - ஆணாயிருந்து, பெண் ஆய வடிவு தோன்றும் - பெண்ணாகிய உருவம் தோன்றாநிற்கும்; அடியவர்கட்கு - அடியார்களுக்கு, ஆர் அமுதம் ஆகி தோன்றும் - அரிய அமிர்தமாகித் தோன்றாநிற்

கும்; ஊண் ஆகி - உணவின் பொருட்டாக, ஊர் திரிவானுகி தோன்றும் - ஊர்தோறும் திரிபவனாய்த் தோன்றும்; ஒற்றை - ஒரு கலையாகிய, வெள் பிறை தோன்றும் - வெண்பிறை தோன்றுநிற்கும்; பற்றார் தம்மேல்-பகைவர் மெய்யை, சேண்-ஆகாயத்தை யளாவிய, நாகவரை வில்லால் - மேருமலையாகிய வில்லினால், எரித்தல் தோன்றும் - எரித்தல் தோன்றுநிற்கும்; செத்தவர்தம் எலும்பினால்-இறந்தவரது எலும்பினால், செறியச் செய்த - நெருங்கக் கட்டின, பூண் நாணும்-ஆபரணமாலையும், அரைநாணும்-அரைஞாணும், பொலிந்து தோன்றும்-விளங்கித் தோன்றுநிற்கும், எ - று.

(வி - ரை.) பற்றார்-அடுக்காதவர் (திரிபுரத்தார்); இவர் மெய்யை யெரித்தது, "செல்வரை மெய்யெரிகாய் சிலையாகண் டென்னை யாண்டுகொண்ட செவ்வரை மேனியன்" என்னும் மணிவாசகர் திருவாக்கா லினிது விளங்கும். மேல் - உடம்பு. (உ)

கல்லாலி னீழறனிற் கலந்து தோன்றுங்
கவின்மறையோர் நால்வர்க்கு நெறிக ளன்று
சொல்லாமற் சொல்லியவா தோன்றுந் தோன்றுஞ்
சூழரவு மான்மறியுந் தோன்றுந் தோன்று
மல்லாத காலனைமுன் னடர்த்த றோன்று
மைவகையா னினைவார்பா லமர்ந்து தோன்றும்
பொல்லாத புலாலெலும்பு பூணாய்த் தோன்றும்
பொழிறிகழும் பூவணத்தெம் புனித னார்க்கே.

(ப - ரை.) கல்லாலின் நீழறனில் கலந்துதோன்றும் - கல்லாலின் நிழலிற் சேர்ந்து தோன்றுநிற்கும்; கவின்-அழகிய, மறையோர் நால்வர்க்கும் - வேதியர் நால்வர்க்கும், நெறிகள் - முத்திநெறிகளை, அன்று - அந்நாளில், சொல்லாமல் சொல்லியவாறு - சொல்லாமற் சொன்னவிதம், தோன்றும் தோன்றும் - தோன்றுநிற்கும் தோன்றுநிற்கும்; சூழ் அரவும் - சூழ்ந்த பாம்புகளும், மான் மறியும் - மான் கன்றும், தோன்றும் தோன்றும்—; அல்லாத காலனை - நல்லவனல்லாத யமனை, முன் - முற்காலத்தில், அடர்த்தல் தோன்றும்-வென்றமை தோன்றுநிற்கும்; ஐவகையால் நினைவார்பால் - ஐவகையாலே நினைக்கிறவர்களிடத்தில், அமர்ந்து தோன்றும்-விரும்பித் தோன்றுநிற்கும்; பொல்லாத புலால் எலும்பு - பொல்லாத மாமிசத்தோடு கூடிய எலும்புகளே, பூணாய் தோன்றும் - ஆபரணமாகத் தோன்றுநிற்கும்; பொழில் திகழும் பூவணத்து எம் புனிதனார்க்கு—, எ - று.

(வி - ரை.) ஐவகையானினைத்தல் - ஐம்பொறிகளாலும் நுகர்தல்; அன்றி, ஐந்தொழிலையு நடத்துவோனென்று நினைத்தல் எனினுமாம். (ரு)

படைமலிந்த மழுவாளு மானுந் தோன்றும்
பன்னிரண்டு கண்ணுடைய பிள்ளை தோன்று
நடைமலிந்த விடையோடு கொடியுந் தோன்று
நான்மறையி னொலிதோன்று நயனந் தோன்று
முடைமலிந்த கோவணமுங் கீளுந் தோன்று
மூரல்வெண் சிரமாலை யுலாவித் தோன்றும்
புடைமலிந்த பூதத்தின் பொலிவு தோன்றும்
பொழிறிகழும் பூவணத்தெம் புனித னார்க்கே.

(ப-ரை.) படைமலிந்த-ஆயுதரூபமாக விளங்குகிற, மழுவாளும்-மழுவாளும், மானும் தோன்றும் - மானும் தோன்றாநிற்கும்; பன்னிரண்டு கண் உடைய பிள்ளை தோன்றும் - பன்னிரண்டு கண்களையுடைய பிள்ளை தோன்றாநிற்கும்; நடை மலிந்த விடையோடு கொடியும் தோன்றும் - நடை மிகுந்த இடபத்துடனே கொடியுந் தோன்றாநிற்கும்; நான்மறையின் ஒலி தோன்றும் - நான்கு வேதங்களின் ஓசை தோன்றாநிற்கும்; நயனம் தோன்றும் - கண்கள் தோன்றாநிற்கும்; உடை மலிந்த - உடுத்தல் மிகுந்த, கோவணமும் கீளும் தோன்றும் - கோவணமுங் கீளுந் தோன்றாநிற்கும்; மூரல்-பரவிய, வெள் சிரமாலை - வெள்ளிய தலைமாலைகள், உலாவி தோன்றும் - உலாவித் தோன்றாநிற்கும்; புடை மலிந்த - பக்கத்தில் மிகுந்திருக்கிற, பூதத்தின் பொலிவு தோன்றும் - பூதகணங்களின் பொலிவு தோன்றாநிற்கும்; பொழில் திகழும் பூவணத்து எம் புனிதனார்க்கு—, எ - று.

(வி - ரை.) பன்னிரண்டு கண்ணுடைய பிள்ளை - சுப்பிரமணியன். 'மூரல் வெண் சிரமாலை' எனக் கொண்டு 'நகு வெண்டலைமாலை' என்றுரைத்தலுமாம். (சு)

மேலாகுந் தன்னடியார்க் கருளுந் தோன்று
மாசிலாப் புன்சடைமேன் மதியந் தோன்று
மியல்பாக விடுபிச்சை யேற்ற றோன்று
மிருங்கடனஞ் சுண்டிருண்ட கண்டந் தோன்றுங்
கயல்பாயக் கடுங்கலுழிக் கங்கை நங்கை
யாயிரமா முகத்தினொடு வானிற் றோன்றும்
புயல்பாயச் சடைவிரித்த பொற்புத் தோன்றும்
பொழிறிகழும் பூவணத்தெம் புனித னார்க்கே.

(ப - ரை.) மயலாகும் தன் அடியார்க்கு-விரும்புகிற தன்னடியார்மேல், அருளும் தோன்றும் - அருளும் தோன்றாநிற்கும்; மாசு இல்லா - குற்ற மில்லாத, புன்சடைமேல்-புல்லிய சடையின் மீது, மதியம் தோன்றும் - சந்திரகண்டம் தோன்றாநிற்கும்; இயல் பாக - இயற்கையாக, இடு பிச்சை - இடப்படுகிற பிக்ஷையை, ஏற்றல் தோன்றும் - ஏற்பது தோன்றாநிற்கும்; இரு கடல் - பெரிய கடலி லுண்டாகிய, நஞ்சு உண்டு இருண்ட - விடமுண்டு கறுத்த, கண்டம் தோன்றும் - கண்டம் தோன்றாநிற்கும்; கயல் பாய - கயல்கள் பாயாநிற்க, கடு கலுழி - வேகமாகிய நீர்ப்பெருக்கையுடைய, கங்கை நங்கை - கங்கையாகிய பெண், ஆயிரம் மா முகத்தினொடு - ஆயிரம் பெரிய முகங்களுடனே, வானில் தோன்றும் - ஆகாயத்தில் தோன்றாநிற்கும்; புயல் பாய சடை விரித்த - நீர்பாயச் சடையை விரித்த, பொற்பு தோன்றும் - அழகு தோன்றாநிற்கும்; பொழில் திகழும் பூவணத்து எம் புனிதனார்க்கு—, எ - று.

(வி - ரை.) புயல் - மேகம்; அது இடவாகுபெயராய் அதி லுள்ள நீருக்காயிற்று. 'கடல்' என்றது பாற்கடலை. (6)

பாராழி வட்டத்தார் பரவி யிட்ட
 பன்மலரு நறும்புகையும் பரந்து தோன்றுஞ்
சீராழித் தாமரையின் மலர்க ளன்ன
 திருந்தியமா நிறத்தசே வடிக டோன்று
மோராழித் தேருடைய விலங்கை வேந்த
 னுடறுணித்த விடர்பாவங் கெடுப்பித் தன்று
போராழி முன்னீந்த பொற்புத் தோன்றும்
 பொழிறிகழும் பூவணத்தெம் புனித னார்க்கே.

(ப - ரை.) பார் ஆழி வட்டத்தார் - பெரிய கடல் சூழ்ந்த பூமண்டலத்தார், பரவி இட்ட - வழிபட்டு அர்ச்சனை செய்த, பல் மலரும் நறும்புகையும் - பல மலர்களும் வாசனைப் புகையும், பரந்து தோன்றும்-விரிந்து தோன்றாநிற்கும்; சீர் ஆழி தாமரையின் மலர்கள் அன்ன - சிறந்த வட்டமாகிய தாமரை மலர்கள்போன்ற, திருந்திய மா நிறத்த - திருத்தமாகிய அழகிய நிறத்தையுடைய, சேவடிகள் தோன்றும்-திருவடிகள் தோன்றாநிற்கும்; ஓர் - ஒப்பற்ற, ஆழி-உருளை கோத்த, தேர் உடைய - தேரையுடைய, இலங்கை வேந்தன்-இராவணனது, உடல் துணித்த-உடம்பைச் சேதித்த, இடர் பாவம் - துன்பத்தைத் தருகிற பாவத்தை, கெடுப்பித்து - கெடச்செய்து, அன்று - அந்நாளில், போர் ஆழி - போர்ச் சக்கரத்தை, முன் ஈந்த-

முன்னே கொடுத்த, பொற்பு தோன்றும் - அழகு தோன்றுகிற்கும்; பொழில் திகழும் பூவணத்து எம் புனிதனூர்க்கு—, எ - று.

(வி - ரை.) ஆழி - ஆழமுடையது. பார் - பருமையடியாகப் பிறந்த பெயரெச்சம். போராழி முன்னீந்தது திருமாலுக்கு. (௬)

தன்னடியார்க் கருள்புரிந்த தகவு தோன்றுஞ்
சதுர்முகனைத் தலையரிந்த தன்மை தோன்று
மின்னனைய நுண்ணிடையாள் பாகந் தோன்றும்
வேழத்தி னுரிவிரும்பிப் போர்த்த றோன்றுந்
துன்னியசெஞ் சடைமேலோர் புனலும் பாம்புந்
தூயமா மதியுடனே வைத்த றோன்றும்
பொன்னனைய திருமேனி பொலிந்து தோன்றும்
பொழிறிகழும் பூவணத்தெம் புனித னூர்க்கே.

(ப - ரை.) தன் அடியார்க்கு - தன் அடியவர்க்கு, அருள் புரிந்த - அருள் செய்த, தகவு தோன்றும் - தகுதி தோன்றுகிற்கும்; சதுர்முகனை தலை அரிந்த - பிரமனைச் சிரங்கொய்த, தன்மை தோன்றும் - தன்மை தோன்றுகிற்கும்; மின் அனைய-மின்கொடி போன்ற, நுண் இடையாள் - நுண்ணிடையாளாகிய உமாதேவியின், பாகம் தோன்றும் - பாகம் தோன்றுகிற்கும்; வேழத்தின் உரி - யானைத் தோலை, விரும்பி போர்த்தல் தோன்றும் - விரும்பிப் போர்த்துக் கொள்ளுதல் தோன்றுகிற்கும்; துன்னிய - நெருங்கிய, செஞ்சடை மேல் - செஞ்சடையின்மீது, ஓர் - ஒப்பற்ற, புனலும் பாம்பும் - கங்கையையும் பாம்பையும், தூய - பரிசுத்தமாகிய, மா மதியுடனே - அழகிய பிறையோடு, வைத்தல் தோன்றும்-வைத்திருப்பதுதோன்று கிற்கும்; பொன் அனைய திருமேனி - பொன் போன்ற திருமேனி யானது, பொலிந்து தோன்றும் - பொலிந்து தோன்றுகிற்கும்; பொழில் திகழும் பூவணத்து எம் புனிதனூர்க்கு—, எ - று.

(வி - ரை.) 'தகவு' பெருமையுமாம். (௭)

செறிகழலுந் திருவடியுந் தோன்றுந் தோன்றுந்
திரிபுரத்தை யெரிசெய்த சிலையுந் தோன்று
நெறியதனை விரித்துரைத்த நேர்மை தோன்று
நெற்றிமேற் கண்டோன்றும் பெற்றந் தோன்று
மறுபிறவி யறுத்தருளும் வகையுந் தோன்று
மலைமகளுஞ் சலமகளு மலிந்து தோன்றும்
பொறியரவு மிளமதியும் பொலிந்து தோன்றும்
பொழிறிகழும் பூவணத்தெம் புனித னூர்க்கே.

(ப - ரை.) செறி கழலும் - நெருங்கிய வீரக்கழலும், திருவடியும் - (அதனை யணிந்த) திருவடியும், தோன்றும் தோன்றும் - தோன்றுநிற்கும் தோன்றுநிற்கும்; திரிபுரத்தை எரிசெய்த - முப்புரத்தை யெரித்த, சிலையும் தோன்றும் - வில்லுந் தோன்றுநிற்கும்; நெறியதனை விரித்து உரைத்த-மெய்ந்நெறியை விரித்துச் சொன்ன, நேர்மை தோன்றும் - செம்மைக் குணம் தோன்றுநிற்கும்; நெற்றிமேல் கண் தோன்றும் - நெற்றியின்மீது ஒருகண் தோன்றுநிற்கும்; பெற்றம் தோன்றும்-இடபம் தோன்றுநிற்கும்; மறு பிறவி அறுத்து அருளும் வகையும் தோன்றும் - மறு ஜனனத்தை யறுத்தருள் செய்கிற விதமும் தோன்றுநிற்கும்; மலைமகளும் - பார்வதியும், சலமகளும்-கங்கையும், மலிந்து தோன்றும்-மிகவும் தோன்றுநிற்கும்; பொறி அரவும் - புள்ளிகளையுடைய பாம்பும், இள மதியும் - இளம் பிறையும், பொலிந்து தோன்றும் - விளங்கித் தோன்றுநிற்கும்; பொழில் திகழும் பூவணத்து எம் புனிதனார்க்கு—, எ - று.

(வி-ரை.) நெறியதனை விரித்துரைத்தது சநகாதியர்க்கு. (அ)

அரும்பேர்ட்டு முலைமடவாள் பாகந் தோன்று
மணிகிளரு முருமென்ன வடர்க்குங் கேழன்
மருப்போட்டு மணிவயிரக் கோவை தோன்று
மணமலிந்த நடந்தோன்று மணியார் வைகைத்
திருக்கோட்டி னின்றதோர் திறமுந் தோன்றுஞ்
செக்கர்வா னொளிமிக்குத் திகழ்ந்த சோதிப்
பொருப்போட்டி நின்றதிண் புயமுந் தோன்றும்
பொழிறிகழும் பூவணத்தெம் புனித னார்க்கே.

(ப - ரை.) அரும்பு ஒட்டும் முலை-தாமரையரும்பைத் தூரத்துகின்ற தனங்களையுடைய, மடவாள் - உமாதேவியின், பாகம்-இடப்பாகம், தோன்றும் - தோன்றுநிற்கும்; அணி கிளரும் - அழகு விளங்குகின்ற, உரும் என்ன - இடிபோல, அடர்க்கும் - ஆரவாரிக்கின்ற, கேழல் - பன்றியினது, மருப்பு-கொம்புகளால், ஒட்டும்-செய்யப்பட்ட, மணி - அழகிய, வயிரக்கோவை - வச்சிரகண்டிகை, தோன்றும் - தோன்றுநிற்கும்; மணம் மலிந்த - மண மிகுந்த, நடம்-நடனமானது, தோன்றும் - தோன்றுநிற்கும்; மணி ஆர் - இரத்தினங்கள் நிறைந்த, வைகை - வைகைநதியின், திருக்கோட்டில் நின்றது - அழகிய கரையின்மீது நின்றதாகிய, ஓர் திறமும் - ஒப்பற்ற விதமும், தோன்றும் - தோன்றுநிற்கும்; செக்கர்வான் - செவ்வானத்தின், ஒளி மிக்கு - ஒளி மிகுந்து, திகழ்ந்த - விளங்குகின்ற,

சோதி - பிரகாசத்தையுடைய, பொருப்பு - மேருமலையை, ஒட்டி நின்ற - தோற்பித்து நின்ற, திண் புயமும் - வலிய தோள்களும், தோன்றும் - தோன்றாநிற்கும்; பொழில் திகழும் பூவணத்து எம் புனிதனார்க்கு—, எ - று.

(வி - ரை.) 'அருப்போட்டுமுலை' என்பதில் ஒட்டும் உவம வுருபெனக் கொண்டு 'அரும்புபோலும் முலை' எனினுமாம். அரும்பு 'அருப்பு' என வலித்தல் பெற்றது. கோவை - மாலையுமாம். கோடு - கரை. (கூ)

ஆங்கணைந்த சண்டிக்கு மருளி யன்று
தன்முடிமே லலர்மாலை யளித்த றோன்றும்
பாங்கணைந்து பணிசெய்வார்க் கருளி யன்று
பலபிறவி யறுத்தருளும் பரிசுந் தோன்றுங்
கோங்கணைந்த கூவிளமு மதமத் தம்முங்
குழற்கணிந்த கொள்கையொடு கோலந் தோன்றும்
பூங்கணைவே ளுருவழித்த பொற்புத் தோன்றும்
பொழிறிகழும் பூவணத்தெம் புனித னார்க்கே.

(ப - ரை.) ஆங்கு அணைந்த - அவ்விடத்து வந்த, சண்டிக்கும் - சண்டேசுரனுக்கும், அருள் இயன்று - அருள் செய்து, தன் முடிமேல் - தன் சிரசில் அணிந்திருக்கின்ற, அலர் மாலை - பூமாலையை, அளித்தல் தோன்றும் - கொடுத்தலும் தோன்றாநிற்கும்; பாங்கு அணைந்து - பக்கத்தி லிருந்துகொண்டு, பணி செய்வார்க்கு - தொண்டு செய்வார்க்கு, அருள் இயன்று - அருள் செய்து, பல பிறவி - பல பிறவிகளை, அறுத்தருளும் - சேதித்தருளுகின்ற, பரிசும் - விதமும், தோன்றும் - தோன்றாநிற்கும்; கோங்கு அணைந்த - வாசனை பொருந்திய, கூவிளமும் - வில்வமும், மதமத்தமும் - செழித்த ஊமத்தமலரும், குழற்கு அணிந்த - சடையில் தரித்த, கோலமொடு கொள்கை - அழகோடு கூடின கொள்கையும், தோன்றும் - தோன்றாநிற்கும்; பூங்கணை - புஷ்ப பாணத்தையுடைய, வேள் - மன்மதனது, உருவு அழித்த - உருவை அழித்த, பொற்பு - அழகானது, தோன்றும் - தோன்றாநிற்கும்; பொழில் திகழும் பூவணத்து எம் புனிதனார்க்கு—, எ - று.

(வி - ரை.) 'குழற்கு' என்னும் நான்கனுருபு ஏழாவதனிடப் பொருளில் வந்தது. (௰)

* ஆருருவ வுள்குவா ருள்ளத் துள்ளே
யவ்வுருவாய் நிற்கின்ற வருளுந் தோன்றும்
வாருருவப் பூண்முலைநன் மங்கை தன்னை
மகிழ்ந்தொருபால் வைத்துகந்த வடிவு தோன்று
நீருருவக் கடலிலங்கை யரக்கர் கோனை
நெறுநெறென வடர்த்திட்ட நிலையுந் தோன்றும்
போருருவக் கூற்றுதைத்த பொற்புத் தோன்றும்
பொழிறிகழும் பூவணத்தெம் புனித னார்க்கே.

(ப - ரை.) ஆர் உருவம் - அருமையாகிய தன் உருவத்தை, உள்குவார்-நினைப்பவாது, உள்ளத்துள்ளே - மனத்தினுள்ளே, அவ் வுருவாய் நிற்கின்ற - அவ்வுருவமாய் நிற்கிற, அருளும் தோன்றும்- அருளும் தோன்றுநிற்கும்; வார் - கச்சணிந்த, உருவம் - அழகோடு கூடிய, பூண் - ஆபரண மணிந்த, முலை - தனங்களையுடைய, நல் மங்கைதன்னை-சிறந்த உமாதேவியை, மகிழ்ந்து-மனமகிழ்ந்து, ஒரு பால் வைத்து-ஒருபாகத்தில் வைத்து, உகந்த வடிவு-எற்றுக்கொண்ட வடிவம், தோன்றும்-தோன்றுநிற்கும்; நீர் உருவம்-நீர் உருவமாகிய, கடல் - கடல் சூழ்ந்த, இலங்கை - இலங்கைப் பட்டணத்தையுடைய, அரக்கர் கோனை - இராக்கதர்க்கு அரசனான இராவணனை, நெறுநெறென-நெறுநெறென்று நெரியும்படி, அடர்த்திட்ட-(அவன் தோள் களை) அழுத்தின, நிலையும் - நிலைமையும், தோன்றும் - தோன்று நிற்கும்; போர் உருவம் - போர்த்தொழிலே வடிவாகக் கொண்ட, கூற்று - யமனை, உதைத்த பொற்பு - உதைத்த அழகானது, தோன் றும் - தோன்றுநிற்கும்; பொழில் திகழும் பூவணத்து எம் புனித னார்க்கு—, எ - று.

(வி - ரை.) 'ஒருபால்' என்றது இடப்பாகத்தை; அடர்த்தல் - நெரித்தல் எனினுமாம்.

திருச்சிற்றம்பலம்.

[திருப்பூவணம் என்னும் இத்தலம் பாண்டிநாட்டி லுள்ளது. சுவாமி பெயர் - பூவணநாதர். தேவியார் - மின்னும்பிகை யம்மை.]

---

* இக் கருத்தேபற்றிப் பதினொன்றாந் திருமுறையுள் சேர மான் பெருமாளும் திருக்கயிலாய ஞானவுலாவில்,

"எவ்வுருவில் யாரொருவ ருள்குவா ருள்ளத்து
எவ்வுருவாய்த் தோன்றி யருள் கொடுப்பாய்."

எனவு மருளிச்செய்ததனாு மறிக.

சுந்தரமூர்த்திநாயனார்

## திருக்கடவூர்மயானம்

ஏழாந் திருமுறை.

பண்-பழம்பஞ்சுரம்.

---

சிவனுருவம்.

---

திருச்சிற்றம்பலம்.

மருவார் கொன்றை மதிசூடி
மாணிக் கத்தின் மலைபோல
வருவார் விடைமேன் மாதோடு
மகிழ்ந்து பூதப் படைசூழத்
திருமால் பிரம னிந்திரற்குந்
தேவர் நாகர் தானவர்க்கும்
பெருமான் கடவூர் மயானத்துப்
பெரிய பெருமா னடிகளே.

(ப - ரை) மரு ஆர் கொன்றை - மணம் பொருந்திய கொன்றை மலர்மாலையையும், மதி - இளம்பிறையையும், சூடி-தரித்து, மாணிக்கத்தின் மலைபோல - மாணிக்க மலைபோல், பூதப்படை சூழ-பூதப்படைகள் சூழ்ந்துவர, மகிழ்ந்து - மகிழ்வடைந்து, மாதோடு - உமாதேவியாரோடு, விடைமேல் வருவார் - இடபத்தின்மேலேறி வருவார், (யாரெனின்) திருமால் பிரமன் இந்திரற்கும் - திருமாலுக்கும் பிரமனுக்கும் இந்திரனுக்கும், தேவர் நாகர் தானவர்க்கும் - தேவர்க்கும் நாகர்க்கும் தானவர்க்கும், பெருமான் - இறையவனாய், கடவூர் மயானத்து - திருக்கடவூர் மயானத்தி லெழுந்தருளியிருக்கிற, பெரிய பெருமான் அடிகளே - பெரிய பெருமானாகிய சுவாமிகளே யாவர், எ-று.

(வி - ரை.) மரு ஆர் - வாசனை மிகுந்த எனினுமாம். 'இந்திரற்கும்' என்னும் உம்மையைத் 'திருமால்' என்பதனோடும், 'பிரமன்' என்பதனோடும்; 'தானவர்க்கும்' என்னும் உம்மையைத் 'தேவர்' என்பதனோடும் கூட்டுக. (க)

விண்ணோர் தலைவர் வெண்புரிநூன்
மார்பர் வேத கீதத்தர்
கண்ணார் நுதலர் நகுதலையர்
கால காலர் கடவூரா
ரெண்ணார் புரமூன் றெரிசெய்த
விறைவ ரிமையோ ரொருபாகம்
பெண்ணா ணாவர் மயானத்துப்
பெரிய பெருமா னடிகளே.

(ப - ரை.) விண்ணோர் தலைவர் - தேவர்களுக்குத் தலைவரும்; வெண் புரி நூல் மார்பர் - வெண்புரிநூலைத் தரித்த மார்பினை யுடையவரும்; வேத கீதத்தர் - வேதகீதத்தை யுடையவரும்; கண் ஆர் நுதலர்-கண்ணோடு கூடிய நெற்றியை யுடையவரும்; நகு தலையர் - சிறிக்கின்ற தலையை யுடையவரும்; கால காலர்-கால காலரும்; கடவூரார் - கடவூரரும்; எண்ணார் - பகைவருடைய, புரம் மூன்று - முப்புரங்களை, எரி செய்த இறைவர் - எரித்த இறைவரும்; இமையோர் - தேவரும், ஒரு பாகம் - ஒரு பாகத்தில், பெண்-பெண்ணை யுடைய, ஆண் ஆவர் - ஆணுருவாவாரும், (யாரெனின்) மயானத்து - திருக்கடவூர் மயானத்தி லெழுந்தருளியிருக்கிற, பெரிய பெருமாள் அடிகளே—, எ - று.

(வி - ரை.) 'உமையோ ரொருபாகம் பெண்ணணாவர்' எனப் பாடபேதமுண்டு; இதற்கு, 'உமாதேவியாரை யொருபாகத்தி லுடைமையால் பெண்டன்மையும், ஒருபாகத்தில் தமதுருவா யிருத்தலால் ஆண்டன்மையும் உடைய ரென்பது தோன்ற, 'உமையோ ரொரு பாகம் பெண்ணணாவர்' என்றார். (உ)

காயும் புலியி னதளுடையர்
கண்ட ரெண்டோட் கடவூரார்
தாயுந் தந்தை பல்லுயிர்க்குந்
தாமே யாய தலைவனார்
பாயும் விடையொன் றதுவேறிப்
புலித்தேர்ந் துண்ணும் பரமேட்டி
பேய்கள் வாழும் மயானத்துப்
பெரிய பெருமா னடிகளே.

(ப - ரை.) காயும் புலியின் அதள் உடையர் - கோபிக்கிற புலியின் தோலை யுடையவரும்; கண்டர் - கண்டரும்; எண் தோள்

கடவூரார் - எட்டுத் தோள்களையுடைய கடவூரும்; பல் உயிர்க்கும் - எல்லா வுயிர்களுக்கும், தாயும் தந்தை - தாயும் தந்தையும், தாமே ஆய தலைவனார் - தாமேயாகிய தலைவரும்; பாயும் - பாய்ந்து செல்லுகிற, ஒன்று விடை ஏறி - ஒரு இடபத்தின்மீதேறி, பலி தேர்ந்து உண்ணும் பாமேட்டி - பிச்சைபெற் றுண்ணுகிற பாமேட்டியும்; (யாரெனின்) பேய்கள் வாழும் மயானத்து - பேய்கள் வாழ்கின்ற திருக்கடவூர்மயானத்தி லெழுந்தருளியிருக்கிற, பெரிய பெருமான் அடிகளே—, எ - று.

(வி - ரை.) காய்தல் - உறுமுதலுமாம். கண்டர் - நீலகண்டர். 'தாயும்' என்னும் உம்மை தந்தை யென்பதனோடும் கூட்டப்பட்டது. பாமேட்டி - மேன்மையாகிய யாகங்களுக்கு முதல்வன். (௩)

நறைசேர் மலரைங் கணையானை
 நயனத் தீயாற் பொடிசெய்த
விறையா ராவ ரெல்லார்க்கு
 மில்லை யென்ன தருள்செய்வார்
பறையார் முழவம் பாட்டோடு
 பயிலுந் தொண்டர் பயில்கடவூர்ப்
பிறையார் சடையார் மயானத்துப்
 பெரிய பெருமா னடிகளே.

(ப - ரை.) நறை சேர் - மணம் பொருந்திய, மலர் ஐங்கணையானை - ஐந்து பூவம்புகளை யுடையவனாகிய மன்மதனை, நயனம் தீயால் - கண்ணெருப்பால், பொடி செய்த - பொடித்த, இறையார் ஆவர் - இறைவராவாரும்; எல்லார்க்கும் - யாவருக்கும், இல்லை என்னாது - இல்லை யென்னாமல், அருள் செய்வார் - அருள் செய்வாரும்; பறை ஆர் முழவம் - பறையும் பொருந்திய முழவமும், பாட்டோடு பயிலும் - பாடலோடு பயில்கின்ற, தொண்டர் பயில் - அடியார்கள் வாழ்கிற, கடவூர் பிறை ஆர் சடையார் - கடவூரிலுள்ள பிறை யணிந்த சடையை யுடையவரும், (யாரெனின்) மயானத்து - திருக்கடவூர் மயானத்தி லெழுந்தருளியிருக்கிற பெரிய பெருமான் அடிகளே—, எ - று.

(வி-ரை.) 'நறை' தேன் எனினுமாம். 'பறை' 'முழவம்' என்பன வாத்திய விசேடங்கள். (௪)

கொத்தார் கொன்றை மதிசூடிக் கோணா கங்கள் பூணாக
மத்த யானை யுரிபோர்த்து மருப்பு மாமைத் தாலியார்

பத்தி செய்து பாரிடங்கள் பாடி யாடப் பலிகொள்ளும்
பித்தர் கடவூர் மயானத்துப் பெரிய பெருமா னடிகளே.

(ப - ரை.) கொத்து ஆர்-கொத்துகளா யிருக்கிற, கொன்றை - கொன்றைமலர் மாலையையும், மதி - பிறையையும், சூடி - தரித்து; கோள் நாகங்கள் - துன்பத்தைச் செய்கிற பாம்புகளை, பணி ஆக - ஆபரணமாகக் கொண்டு; மத்த யானை உரி போர்த்து-மத யானையின் தோலைப் போர்த்து; மருப்பும் ஆமைத் தாலியார்-(அதன்) கொம்பை யும் ஆமையோட்டையும் தாலியாக வுடையவரும்; பாரிடங்கள் - பேய்கள், பத்தி செய்து - பத்தி பண்ணி, பாடி ஆட - பாடி யாடா நிற்க, பலி கொள்ளும் - பிச்சை யேற்கிற, பித்தர் - பித்தரும்; (யாரெனின்) கடவூர் மயானத்து-திருக்கடவூர் மயானத்தி லெழுந் தருளியிருக்கிற, பெரிய பெருமான் அடிகளே—, எ - று.

(வி - ரை.) கொன்றை அதன் மலருக்கும், மலர் அதனாற் றொடுக்கப்பட்ட மாலைக்கும் ஆயினமையால் இருமடியாகுபெயர். பின்னையது கருவியாகு பெயர். (௬)

துணிவார் கீளுங் கோவணமுந்
துதைந்து சுடலைப் பொடியணிந்து
பணிமே லிட்ட பாசுபதர்
பஞ்சு வடிமார் பினர்கடவூர்த்
திணிவார் குழையார் புரமூன்றுந்
தீவாய்ப் படுத்த சேவகனார்
பிணிவார் சடையார் மயானத்துப்
பெரிய பெருமா னடிகளே.

(ப - ரை.) துணி-துணித்த, வார் கீளும் கோவணமும் துதைந்து-நீண்ட கீளும் கோவணமும் தரித்து, சுடலைப்பொடி அணிந்து-சுடலைப் பொடியைப் பூசி, பணி மேல் இட்ட-பாம்புகளை மேலே பூண்ட, பாசுபதர் - பாசுபதரும்; பஞ்சவடி மார்பினர் - பஞ்சவடி யைத் தரித்த மார்பினை யுடையவரும்; கடவூர் - கடவூரை யுடைய; திணி வார் குழையார் - வலிமையும் நீட்சியுமுள்ள குழையை யணிந்த வரும்; புரம் மூன்றும் - முப்புரங்களையும், தீவாய் படுத்த - நெருப் புக் கிரையாக்கின, சேவகனார் - வீரரும்; பிணி வார் சடையார் - கட்டி நீண்ட சடையை யுடையவரும்; (யாரெனின்) மயானத்து- திருக்கடவூர் மயானத்தி லெழுந்தருளிய, பெரிய பெருமான் அடிகளே—, எ - று.

(வி - ரை.) துணித்தல் - துண்டித்தல். பாசுபதர் - பாசுபதாஸ்திரத்தை யுடையவர். பஞ்சவடி - பூணூல். (சு)

காரார் கடலி னஞ்சுண்ட கண்டர் கடவூ ருறைவாணர்
தேரா ரரக்கன் போய்வீழ்ந்து சிதைய விரலா லூன்றினு
ரூர்தா னுவ துலகேழு முடையார்க் கொற்றி யூராரூர்
பேரா யிரவர் மயானத்துப் பெரிய பெருமா னடிகளே.

(வி - ரை.) கார் ஆர் - கருமை பொருந்திய, கடலில் - பாற்கடலிற் பிறந்த, நஞ்சு - விஷத்தை, உண்ட - உண்டருளின, கண்டர் - கண்டத்தை யுடையவரும்; கடவூர் உறை வாணர் - கடவூரில் வாழ்கிற வாணரும்; தேர் ஆர் அரக்கன்-தேரையுடைய அரக்கன், போய் வீழ்ந்து சிதைய - போய் விழுந் தழியும்படி, விரலால் ஊன்றினர் - விரலால் அழுத்தினவரும்; ஊர்தான் ஆவது - ஊராவதோவென்றால், உலகு எழும் உடையார்க்கு - எழுலகங்களையும் உடையவர்க்கு, ஒற்றியூர் ஆரூர் - ஒற்றியூரும் ஆரூருமாம்; பேர் ஆயிரவர்-ஆயிரம் பேர்களை யுடையவரும், (யாரெனின்) மயானத்து-திருக்கடவூர் மயானத்தி லெழுந்தருளியிருக்கிற, பெரிய பெருமானடிகளே—, எ - று.

(வி - ரை.) 'கார் ஆர்' என்னும் விசேடணம் நஞ்சுக்காதல் கண்டத்துக்காதல் இயைத்துக்கொள்க. (எ)

வாடா முலையா டன்னேடு மகிழ்ந்து கானில் வேடுவனுய்க்
கோடார் கேழற் பின்சென்று குறுகி விசயன் றவமழித்து
நாடா வண்ணஞ் செருச்செய்து வாவ நாழி நிலையருள்செய்
பீடார் சடையார் மயானத்துப் பெரிய பெருமா னடிகளே.

(ப - ரை.) வாடா முலையாள் தன்னேடு மகிழ்ந்து - சாயாத தனங்களை யுடையவளாகிய உமாதேவியோடு கூடி மகிழ்ந்து; கானில்-காட்டில், வேடுவனுய் - வேடனுகி, கோடு ஆர் - கொம்பையுடைய, கேழல் பின் சென்று குறுகி - பன்றியின் பின்னே போய்க் கிட்டி, விசயன் தவம் அழித்து - அருச்சுனனது தவத்தை யழித்து, நாடா வண்ணம் செரு செய்து - பார்க்கவொண்ணுதபடி யுத்தம் பண்ணி, ஆவம் நாழி நிலை அருள் செய்-ஆவமாகிய நாழியை நிலைக்க அருள் செய்த, பீடு ஆர் சடையார் - பெருமை பொருந்திய சடையை யுடையவர், (யாரெனின்) மயானத்து - திருக்கடவூர் மயானத்தி லெழுந்தருளியிருக்கிற, பெரிய பெருமான் அடிகளே—, எ - று.

(வி - ரை.) வாடாமை இவ்விடத்துச் சாயாமைப் பொருளது. ஆவம் - அம்பறாத்தூணி. (அ)

வேழ முரிப்பர் மழுவாளர் வேள்வி யழிப்பர் சிரமறுப்ப
ராழி யளிப்ப ரரிதனக்கு வானஞ் சுகப்ப ரறமுரைப்ப
ரேழை தலைவர் கடவூரி லிறைவர் சிறுமான் மறிக்கையர்
பேழைச் சடையர் மயானத்துப் பெரிய பெருமா னடிகளே.

(ப - ரை.) வேழம் உரிப்பர் - யானையை யுரிப்பவரும்; மழு வாளர் - மழுவாளரும்; வேள்வி அழிப்பர்-யாகத்தைக் கெடுப்பவரும்; சிரம் அறுப்பர் - தலை யறுப்பவரும்; அரிதனக்கு ஆழி அளிப்பர் - விஷ்ணுவுக்குச் சக்கரம் கொடுப்பவரும்; வான் நஞ்சு உகப்பர்-பெரிய விஷத்தை விரும்புவோரும்; அறம் உரைப்பர் - தருமத்தைச் சொல்லுவாரும்; ஏழை தலைவர்-உமாதேவிக்கு நாயகரும்; கடவூரில் இறைவர் - கடவூரிறைவரும்; சிறுமான் மறி கையர் - சிறு மான்கன்றை யேந்திய கையினை யுடையவரும், பேழை சடையார் - பெரிய சடையை யுடையவரும், (யாரெனின்) மயானத்து - திருக்கடவூர் மயானத்தி லெழுந்தருளியிருக்கிற, பெரிய பெருமானடிகளே—, எ-று.

(வி - ரை.) வேள்வி - தக்கன் யாகம். சிரமறுத்தது அவனையே. 'ஆனஞ்சுகப்பர்' என்பதை ஆன் அஞ்சு உகப்பர் எனப் பிரித்து, 'பசுவினது ஐந்து பொருள்களையும் விரும்புவோர்' எனினுமாம். ஆனஞ்சு - பஞ்சகவ்வியம்; அவை: பால், தயிர், நெய், கோமயம், கோசலம் என்பன.

மாட மல்கு கடவூரின் மறையோ ரேத்து மயானத்துப்
பீடை தீர வடியாருக் கருளும் பெருமா னடிகள்சீர்
நாடி நாவ லாரூரா னம்பி சொன்ன நற்றமிழ்கள்
பாடு மடியார் கேட்பார்மேற் பாவ மான பறையுமே.

(ப-ரை.) மாடம் மல்கு கடவூரில்-மாடங்கள் நிறைந்த கடவூரிலுள்ள, மறையோர் ஏத்தும் - வேதியர் துதிக்கின்ற, மயானத்து - திருக்கடவூர் மயானத்தி லெழுந்தருளி, பீடை தீர - துன்பம் நீங்கும்படி, அடியாருக்கு அருளும் - அடியவர்க் கருள்செய்கிற, பெருமான் அடிகள் சீர் - பெருமானடிகளின் சிறப்பை, நாடி - ஆராய்ந்தறிந்து, நாவலாரூரான் நம்பி - சுந்தரர், சொன்ன - சொல்லிய, நல் தமிழ்கள் நல்ல தமிழ் மாலைகளை, பாடும் - பாடுகிற, அடியார் கேட்பார்மேல் - அடியார்மேலும் கேட்போர்மேலும், பாவமான பறையும் - பாவமாயின வெல்லாம் விட்டு நீங்கும், எ - று.

(வி-ரை.) மல்கல் - நிறைதல். நம்பி-சுகுண பூர்த்தியுள்ளவன். பறைதல் - நீங்குதல்,

திருச்சிற்றம்பலம்.

---

திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார்

# திருவாழ்கொளிபுத்தூர்.

முதற் றிருமுறை

பண் - தக்கராகம்.

## திருவடிகள்.

திருச்சிற்றம்பலம்.

பொடியுடை மார்பினர் போர்விடை யேறிப்
பூதக ணம்புடை சூழக்
கொடியுடை யூர்திரிந் தையங் கொண்டு
பலபல கூறி
வடிவுடை வாணெடுங் கண்ணுமை பாக
மாயவன் வாழ்கொளி புத்தூர்
கடிகமழ் மாமல ரிட்டுக் கறைமிடற்
றானடி காண்போம்.

(ப - ரை.) பொடி உடை மார்பினர் - வெண்பொடி பூசின மார்பை யுடையவராய், போர் விடை ஏறி-போர்த் தொழிலையுடைய இடபத்திலேறி, பூத கணம் புடை சூழ - பூதகணங்கள் பக்கத்தில் சூழ்ந்துவர, கொடி உடை - கொடிகளையுடைய, ஊர் திரிந்து - ஊர்கள்தோறும் திரிந்து, ஐயம் கொண்டு - பிச்சையேற்று, பல பல கூறி - பற்பலவற்றைச் சொல்லி, வடிவு உடை - அழகையுடைய, வாள்-ஒளி பொருந்திய, நெடு கண் - நெடிய கண்களையுடைய, உமை பாகம் ஆயவன் - உமாதேவியைப் பாகத்திற் பெற்றவன் ஆகிய, கறை மிடற்றான் - விஷ கண்டத்தானாகிய சிவபெருமானது, அடி - திருவடியை, வாழ்கொளி புத்தூர் - திருவாழ்கொளிபுத்தூரில், கடி கமழ் - வாசனை வீசுகிற, மா மலர் இட்டு - அழகாகிய மலர்களால் அருச்சித்து, காண்போம் - தரிசிப்போம், எ - று.

(வி - ரை.) 'வடியுடை' எனப் பாடங்கொண்டு 'கூர்மையை யுடைய' எனப் பொருளுரைத்து அதனை வாளுக்கு விசேடண மாக்கினு மமையும். (க)

அரைகெழு கோவண வாடையின் மேலோ
ராடர வம்மசைத் தையம்
புரைகெழு வெண்டலை யேந்திப் போர்விடை
யேறிப் புகழ
வரைகெழு மங்கைய தாகமோர் பாக
மாயவன் வாழ்கொளி புத்தூர்
விரைகமழ் மாமலர் தூவி விரிசடை
யானடி சேர்வோம்.

(ப - ரை.) அரைகெழு - அரையிற் கட்டின, கோவண ஆடையின்மேல் - கோவணவுடையின்மேல், ஓர் - ஒப்பற்ற, ஆடு அரவம் - படமெடுத்தாடு மியல்புள்ள பாம்பை, அசைத்து - கட்டி; ஐயம் - பிச்சையை, புரை கெழு வெள் தலை ஏந்தி - தொளைகளையுடைய வெண்டலையிலேற்று; போர் விடை ஏறி - போர்த்தொழிலையுடைய இடபத்திலேறி; புகழ - யாவரும் புகழும்படி, வரை கெழு மங்கையது ஆகம் - பர்வதராஜ குமாரியின் திருமேனி, ஓர் பாகம் ஆயவன்-ஒரு பாகத்திற் பெற்றவன் ஆகிய, விரி சடையான் - படர்ந்த சடையை யுடையவனாகிய சிவபெருமானது, அடி - திருவடியை, வாழ்கொளிபுத்தூர் - திருவாழ்கொளிபுத்தூரில், விரை கெழு - மணம் பொருந்திய, மா மலர் தூவி - அழகாகிய மலர்களால் அருச்சித்து, சேர்வோம் - அடைவோம், எ - று.

(வி - ரை.) வரைகெழு மங்கை - மலையரையன் மகளாகிய வுமாதேவி. ஆகம் - உடம்பு. ஓர் பாகம் - இடப்பாகம். (உ)

பூணெடு நாகம சைத்தன லாடிப்
புன்றலை யங்கையி லேந்தி
யூணிடு பிச்சையூ ரைய முண்டியென்
றுபல கூறி
வாணெடுங் கண்ணுமை மங்கையோர் பாக
மாயவன் வாழ்கொளி புத்தூர்த்
தாணெடு மாமல ரிட்டுத் தலைவன
தாணிழல் சார்வோம்.

(ப-ரை.) பூண் - ஆபரணமாக, நெடு நாகம் அசைத்து - நெடும் பாம்புகளைக் கட்டி; அனல் ஆடி - அழலோடாடி; புல் தலை அங்கையில் ஏந்தி - இழிவாகிய தலையைக் கையில் தாங்கி; ஊர் - ஊர்தோறும் சென்று, ஊண் இடு பிச்சை ஐயம் உண்டி என்று பல கூறி - உணவை இடு பிச்சை ஐயம் உண்டி யென்று பல பெயர்களால் சொ

ல்லி, வாள் நெடும் கண் - வாள்போன்ற நெடிய கண்களையுடைய, உமைமங்கை - உமாதேவியை, ஓர் பாகம் ஆபவன் - ஒரு பாகத்திற் பெற்றவன் ஆகிய, தலைவன் - இறைவனுடைய, தாள் நிழல் - திருவடி நிழலை, வாழ்கொளிபுத்தூர் - திருவாழ்கொளிபுத்தூரில், தாள் நெடு மா மலர் இட்டு-காம்புகளையுடைய நெடிய அழகிய மலர்களால் அருச்சித்து, சார்வோம் - அடைவோம், எ - று.

(வி - ரை.) வாள் - ஒளி யெனினுமாம். (௫)

தாரிடு கொன்றையோர் வெண்மதி கங்கை
தாழ்சடை மேலவை சூடி
யூரிடு பிச்சைகொள் செல்வ முண்டியென்
றுபல கூறி
வாரிடு மென்முலை மாதொரு பாக
மாயவன் வாழ்கொளி புத்தூர்க்
காரிடு மாமலர் தூவிக் கறைமிடற்
றானடி காண்போம்.

(ப - ரை.) தார் இடு கொன்றை - மாலையாகக் கட்டின கொன்றை மலர், ஓர் வெண்மதி - ஒரு வெண்பிறை, கங்கை - கங்கை ஆகிய, அவை - அவற்றை, தாழ் சடைமேல் சூடி - நீண்ட சடைமேல் தரித்து; ஊர் இடு பிச்சை உண்டி - ஊரா ரிடுகின்ற பிச்சையுணவை, கொள் - கொள்ளுதற்குரிய, செல்வம் என்று - செல்வமென்று, பல கூறி - பலவற்றைச் சொல்லி; வார் இடு - கச்சணிந்த, மெல் முலை மாது-மெல்லிய தனங்களையுடைய உமாதேவியை, ஒரு பாகம் ஆயவன்-ஒரு பாகத்தி லிருக்கப்பெற்றவனாகிய, கறை மிடற்றான் - விஷ கண்டனது, அடி - திருவடியை, வாழ்கொளிபுத்தூர்-திருவாழ்கொளிபுத்தூரில், கார் இடும் மா மலர் தூவி - மேகம் போல அழகிய மலர்களால் அருச்சித்து, காண்போம் - தரிசிப்போம், எ - று.

(வி - ரை.) 'காரிடு மா மலர் தூவி' என்பதற்கு, 'மேகம் நீர் மழையை மிகுதியாய்ச் சொரிவதுபோல மலர் மழையை மிகுதியாய்ச் சொரிந்து' என்பது பொருள். (௬)

கனமலர்க் கொன்றைய லங்க லிலங்கக்
காதிலோர் வெண்குழை யோடு
புனமலர் மாலை புனைந்தூர் புகுதியென்
றேபல கூறி

வனமுலை மாமலை மங்கையோர் பாக
மாயவன் வாழ்கொளி புத்தூ
ரினமல ரேய்ந்தன தூவி யெம்பெரு
மானடி சேர்வோம்.

(ப-ரை.) சனம் மலர் - மிக்க மலர்களால் தொடுக்கப்பட்ட, கொன்றை அலங்கல் - கொன்றை மாலை, இலங்க-விளங்க, காதில்-செவியில், ஓர் வெள் குழையோடு - ஒரு வெள்ளிய குழையுடனே, புனம் மலர் மாலை புனைந்து-புனமலர் மாலைகளையும் தரித்து, ஊர் - ஊர்தோறும், புகுதி என்று - புகுதி யென்று, பல கூறி - பலவற்றைச் சொல்லி, வன்னம் முலை - அழகிய முலைகளையுடைய, மா மலை மங்கை - பெரிய மலைமாதானவள், ஓர் பாகம் ஆயவன் - ஒரு பாகத்தில் அமர்ந்திருக்கப் பெற்றவனாகிய, எம் பெருமான் - எம்மிறைவனது, அடி-திருவடியை, வாழ்கொளிபுத்தூர்-திருவாழ்கொளிபுத்தூரில், எய்ந்தன - பொருந்தினவாகிய, இன மலர் தூவி - பலவகை மலர்களால் அருச்சித்து, சேர்வோம்-அடைவோம், எ-று.

(பு-ரை.) புனமலர்மாலை - புனத்திலுள்ள தும்பை எருக்கு முதலிய மலர்களா லியன்ற மாலை. புகுதி-புகுதற்குரிய வாயிற்படி. புகுதி என்று பல கூறி - வாயிற்படியில் வந்து நிற்கிறேன் ஐய மிடுங்க ளென்று பலவற்றைச் சொல்லி. (ரு)

அளைவளர் நாகம சைத்தன லாடி
யலர்மிசை யந்தண னுச்சிக்
களைதலை யிற்பலி கொள்ளுங் கருத்தனே
கள்வனே யென்னு
வளையொலி முன்கை மடந்தையோர் பாக
மாயவன் வாழ்கொளி புத்தூர்த்
தளையவிழ் மாமலர் தூவித்
தலைவன தாளிணை சார்வோம்.

(ப-ரை.) அளை வளர் - புற்றில் வளர்கின்ற, நாகம் - பாம்புகளை, அசைத்து - (சிரமுதலிய இடங்களில்) கட்டி; அனல் ஆடி-அழலோடாடி; அலர் மிசை - தாமரைமலரி லிருக்கிற, அந்தணன்-வேதியனாகிய பிரமனது, உச்சி - சிரங்களினின்றும், களை - அறுக்கப்பட்ட, தலையில் - ஒரு தலையோட்டில், பலி கொள்ளும் - பிச்சையேற்கிற, கருத்தனே-கர்த்தனே!, கள்வனே - சோரனே!, என்னு-என்று சொல்லி, வளை ஒலி - வளையல் ஒலிக்கப்பெற்ற, முன் கை -

